# காதல் ஓவியம்

# காமம், மோகம், காதல்

---

பூவையர் நெஞ்சுக்குள்ளும் பூ நாகத்தின் நஞ்சோ?
புரியவில்லை?-அமுதான காதலும் நஞ்சாக-
அன்புக் காதலனும் தேவதாஸாய் உருமாறக்
காதலனை மாற்றும் கன்னியரும் பார்வதிகளோ?

கன்னியரை ஏமாற்றும் காளையரும் கொடியவரே, காமுகரே
இந்திரனாய்ச், சந்திரனாய்ச் இராவணணாய்க், கோவலனாய்
வாழ்வதும் ஒரு வாழ்வோ?

கண்ணகியும், மண்டோதாரியும் தாரங்கள்
மாதவியோ வரைவின் மகளீர் -பாஞ்சாலியும்
சீதையும் மாற்றான் துணைவி -பெண் மனதை
துன்புறுத்தும் -ஆண்கள் கொடிய அரக்கரே

சீதையை தீக்குளிக்கவைத்தவனும்
கர்பிணித் தாயை கானகம் அனுப்பியவனும்
**கணவனாயினும்** கைகேயிலும் கொடியவனே?

தம்பி வென்ற தேவியை-அண்ணன் தருமனும்
தாரமென்றே சூதாடித் தோற்றான்
அவை நடுவே ஆடையுரிந்திட
அழுது நீதி கேட்ட-பத்தினியை காக்கமுடியாத
ஐவரும் கணவரோ? ஐயகோ மாவீரரோ?

பெண்மைக்கு நீதி வழங்கத் தவறிய பீஷ்மரும், கர்ணனும்,
துரோணரும்-ஞானி விதுரனிலும் தாழ்ந்த சாதியே
அந்தகன் திருதராட்டினன் அகக் குருடனே
அரச அவையிலும் அந்தகார இருளெ

கவர்சியினால் -காதல் திருமணம் செய்தவரும்
ஆசை கழிய, மோகம் மறைய வாடிநின்றார்-
கட்டிய மாங்கல்யம் அறுத்திட-நீதியிடம்
விவாகரத்துக் கோரி நின்றார்

ஆசையும், மோகமும்- மாயையே-காமம் கடந்திட,
கவர்ச்சி மறைந்திட ஞானம் பிறந்திடுமோ?
காமமும், காதலாய்த் தோன்றும் பொன்மானோ?
மனங்காணும் இல்லை கானல் நீரோ?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-12-05-2023*

# அபாய(ர) அழகி

---

முடி முதல் அடி வரை முற்றாய்
முழுநிலவோ கார்மேகத் திரை சூடி வர-
என் காதல் வானிலே காரிருள் சூழக்
கத்தும் கடலாய் அலைபாயும் நெஞ்சம்-அபாயா
அழகியிடம் கோரியதோ காதல் தஞ்சம்

காதலுக்கு ஏனடி கறுப்புக்கொடி –கண்ணே
காதலுக்கு அபாயா இரும்புத்திரையடி
காளையரும் உன் அழகைக் கண்டால்-காதல்
கொண்டு தவிப்பார் என்றோ?-கன்னி உன்னை மூடி
காளையர் கற்பைக் காத்தாய் பெண்ணே?

உன் விழிகளும், என்அழகில் மயங்கிக்
காதல் கொண்டதனாலா-
கயல் விழிகளுக்கும், இமைகளையும்
அபாயாயவாய் கொண்டாய் பெண்ணே?

கவிக்குயிலாய் என நெஞ்சம் கவிபாட,
கலாபமயிலாய் உள்ளம் ஆனந்தக் கூத்தாட-பொன்மேனி
அழகை நான் காண-பூங்கதவே தாள்திறவாய்.
பூமகளே அபாயாவைக் கலைவாய்

அபாயம் இளைஞனே என அழகு சொல்ல,
அபயம் என்றே-என் விழிகளால்
அன்பே உனை நான் “தழுவிக்கொல்ல”
காதலாகி கனிந்த நெஞ்சம்
காளையிடம் காதல் தஞ்சம் கொண்டதே

என் நெஞ்சைக் கொள்ளையிட்ட
முகமூடிக் கொள்ளைக்காரி-காதல் மும்தாஜே
ஷா ஜகானுக்கு முகம் காட்டு-காதலுக்கு
சாதி, சமயம் ஏது? கண்ணே நிலை நாட்டு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-12-05-2023

# அலையும் கடலும்

---

அலையும் கரையும் அணைத்து மகிழக், காதலனாய்த்
துடித்திடும் அலை-காதலியாய் மகிழ்ந்திடும் கரை
ஆழ்ந்த அமைதியிலோ ஆழ்கடல்

அவளைக் கண்டபோது, இதயம் துடித்தது-சுவாசம்
ஒரு கணம் நின்று மீண்டது-என் சுவாசக்காற்று
இவள்தானா? இதயம் கேட்டுத் தவித்தது.

கண்ணாடி முன் நின்று பார்த்தேன்
கால வெள்ளத்தில் மாறும் தோற்றங்கள்
கண்ணாடி மாறவில்லை -காட்சிகள் மாறுகின்றன
நான் யார் இன்னும் புரியவில்லை.

ஒவ்வொரு விதைக்குள்ளும் ஓராயிரம் கனவுகள்
விதை மடிந்தால் ஒழிய-கனவுகள் நிஜமாவதில்லை

காதல் ஒரு கண்ணாமூச்சி உன் இதயத்தில் நானும்
என் இதயத்தில் நீயும் ஒளிந்துகொண்டால் எல்லாம் இன்பம்.

விதையை தூவினேன்-மலர் பூத்தது
காதலை தூவினேன் கண்ணீர் வந்தது.

ஆண் விரும்பும் பெண்களில்
அன்னையின் அன்பும், ரோஜாவின் அழகும்.
இரண்டும் ஒரு நாளும் சங்கமிப்பதில்லை
ஏமாற்றமோ காதலின் எல்லை.

கடந்க காலத்தை எண்ணிப் பார்கின்றேன்
முள்ளும் மலருமாய் நினைவுகள்
பாலைவன ரோஜாவாய்க் கனவுகள்.

தோற்ற காதல் வாடிய ரோஜாவாய் இதழ்களை உதிர்த்திட
முள் மட்டும் நெஞ்சில் ஆறாத காயமாய் வருத்திக் கொல்ல
காதலும் மெல்லக் கொல்லும் மலரோ? நஞ்சோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-12-05-2023*

# அழகின் ஆராதனை

---

எத்துனை அழகடி -ரோஜா
என் நெஞ்சில்-நித்தம் பூக்கும்
வண்ண காதல் மலர் நீயடி

சப்த ஸ்வரங்களடி சங்கீதா
உன் இடையிலும், நடையிலும்
ஒலிக்கும் மேகலையும், கொலுசும்
என்னை வாட்டும் மன்மத ராகங்களடி

பண்ணாய் ஒலிக்கும் தேன்மொழிகள்
கம்பனும் கவி காளிதாஸனும்
பாடாத கவிதை வரிகள்

பருகப் பருக மதுவோ போதை
மதுமிதா உனை பார்க்கப் பார்க்க
மனதிலே காமத்துப்பாலின் வாதை

விழி மயக்கும் அழகு
விண்ணவரும் மயங்கும் மொழிகள்
மானாய் விழுந்த மனது
வேல்விழியாள் தந்த பரிசு

உயிரும் மெய்யும் ஒன்றாய் உருகிட
காதல் தந்த பொன்மணி
உயிரும் மெய்யும் ஒன்றாயினைந்து
தமிழாய் மலர்ந்த கன்னி -என் காதலி தமிழினி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-12-05-2023*

# அவலம், அழகு, ஆராதனை

---




கற்போ உப்பு விலை!,
கண்ணகியும், சீதையும் காவிய நிலை
மாதவிகளுக்கோ திரிசங்கு நிலை
கற்புக் கோட்பாடோ கற்பிழந்த நிலை

விளம்பரமும், சினிமாவும், நீலப்படங்களும்
காமத்தூண்டிகளாய்ப் பெண்மையை இழிவுபடுத்த
வறுமையால்-வன்முறையால் வாடிடும் பெண்மை
பாலியற் தொழிலாளியாகும் தீராத கொடுமை,

வல்லுறவால், கைமையால், விவாகரத்தால்
பெண்ணினம் நாளும் துன்புறு
கட்டாயப் பாலியல் தொழிலுக்கு-நாளும்
அப்பாவிச் சிறுமிகள் கடத்தப்படும் நிகழ்வுகள்

சிரிய யுத்தத்தில் உணவுக்கும், நீருக்கும்
நிவாரண பொருட்களுக்கும் கைமாறாய்ப்
தொண்டர்களிடம் பலியாவது பெண்மை
யுத்தங்களும், பயங்கரவாதமும்
பெண்மையை சீரழிப்பது வரலாற்று உண்மை

நீதியோ, பாதுகாப்போ முழுமையாய்
தாய்குலத்திற்கு இல்லை-
பாலியல் துன்புறுத்தல்களோ
இன்றும் தொடரும் கொடுமை



கண்ணகி, மாதவி துன்புறக்-கோவலனே காரணம்
பாஞ்சாலி துன்புற சூதாடி தருமனே காரணம்
சீதையின் வாழ்வும் சீரழிந்ததும் காவலனாள்
கானகம் போனதும் மாலையிட்ட மணாளனாள்.

கட்டிய தாலி அடகுக் கடையில்-கணவனோ மதுக்கடையில்,
பெற்ற குழந்தைகள் பசி தீர்க்க- விற்றிடக் கற்பைத் தவிர
கடுகளவும் பொன்னில்லை, கற்பைக் கூறி விற்க
கடைகளுண்டோ? பாலியல் தொழில் ஆதித் தொழில் அன்றோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-13-05-2023*

# இனிக்கும் இன்ப இரவு

---

நிலவு மலரும் வேளையில் நெஞ்சம் அல்லி மலராய்ப் புன்னகைக்கும்,
துணையை அழைக்க -இதயம் புள்ளிக்குயிலாய் கானம் பாடும்
என் இதயத்தில் இன்றும் காதலின் ஆறாத காயங்கள்
என் இமைக்குள்ளே-காயாத சோகத்தின் ஈரங்கள்.

என் காதல் எழுதி முடிக்காத
துன்பக் கவிதை
என் இதயமோ-தந்தி அறுந்த வீணை

நினைக்கும்போதெல்லாம் தேனாய்-நெஞ்சுக்குள்
அவள் இன்ப நினைவு-நெஞ்சில் இனித்தவளே
என்னை மறந்தாள் என எண்ணும்போதெல்லாம்-
நடைப்பிணமாய் காதலன் என் வாழ்வு

என் காதல் மாறாது-காயமான நெஞ்சம்
உன்னை என்றும் மறவாது-எங்கிருந்தாலும் வாழ்க
வாழ்த்திச் சொல்கிறேன் காதலே நீ வாழ்க
காலம் மாறினாலும் கனிந்த என் காதல் மாறாது
உன் அன்பை என் இதயம் மறவாது

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-14-05-2023

# என்ன விலை அழகே?

---

மின்னல் இடையோ-கண்களைப்பறிக்க
அன்ன நடையோ, மனதை மயக்க
பொன்மேனி வாசமோ சுவாசத்தை நிறைக்க
என் விழியருந்தும் பூந்தேனாய்-
என் மொழி பாடும் பூங்கவிதையாய் அவள்

வண்ணங்கள் அவள் வடிவைச் சொல்ல-மனமோ
காதல் பூச்சரமாய் அவள் எண்ணங்களைத் தொடுக்க
காதலைப் பகிராத நெஞ்சம் பாலையாய் வாடுது-
மலர் மஞ்சமோ தீயாய் என்னை எரிக்குது.

பூச்சரமாய்த் தொடுத்த நினைவுகளில்
மோகமுள்ளின் காயங்கள்-பொன்மேனி
தழுவாமல், பெண் இன்பம் அறியாத மனதில்
ஒற்றைக்குயிலின் விரகதாப கானங்கள்

ஒரு கணம் காணாதபோதும்
பல யுகங்களாய் வாட்டும் சோகம்
ஒரு மொழி கேளாதபோது
தாய்மொழி கேளாத பரிதாபம்

மலரும், வண்டும் கொண்டாடும் உறவு மனதை வாட்டிட-
பூங்குயில்களின் பாடல் புண்ணான நெஞ்சின் சோகத்தைச் சொல்லிட
காதற்கிளிகளின் கொஞ்சல்கள் காமபாணத்தை தொடுத்திட
வானிலே தனியாய் உலாவித் தேயும் நிலவாய் இதயம்.

எல்லாம் நீயென்று என் இதயமும் உருகிட
உயிர், மெய்யால் என்னை ஆட்கொண்ட தேவதையே
வருவாயா? காதல் வரம் தருவாயா?
சொல்லடி காதல் கண்மணி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-15-5-2023

# கண்ணும் கண்ணும் பேசியது

---

கண்களோ-காதல் கள்ளிருக்கும் வண்ண மலரை
வண்டாய் உண்டு சுவைக்க, இதயம் கண்டு திளைக்க
பார்வைகள் தழுவிப் பரவசம் கொள்ள
காதலான நெஞ்சம் குயிலாய் கவி பாடியது

இதழ் விரித்த புன்னகையை இதயம் சூடி மகிழ-
வண்ண மகளைக் காவியமாய் எண்ணம் எழுத-
யாரிவள், ஒரு பார்வையால்-என்னைக்
கொள்ளை கொண்ட தேவதை

முனிவனும்., தேவரும் மயங்கும் பேரழகு
முத்தேவியரும் போற்றும் உத்தமியாள் உள்ளவழகு
மதுமலர் கூந்தல், மையெழுதிய பூவிழிகள்
பொட்டு வைத்த வட்ட நிலா என்னைச் சுற்றும் காதல் நிலா

கட்டழகோ கவிபாடக், காளை நெஞ்சோ காதல் போதையில் தடுமாற
“தழுவிக்கொல், என்னைத் தாங்கிக் கொள்” எனச் சொல்லும் கொடியிடையும்
முத்த மழையில் நனைந்து கொள் முத்தத்தால் எனை அள்ளிக்கொள்
அணைத்துக் கொல் எனச் சொல்லாமல் சொல்லும் செவ்விதழ்களும்
மனதை மயக்க, காதல் பித்தனானேன் அவள் காதல் சொத்துமானேன்

என்னை கொல்லாமல் கண்களால் கொய்கின்றாய்
காதல் சொல்லாமல் கானக்குயிலாய் கானம் இசைக்கிறாய்?
கொல்லாமல் கொல்லும் உந்தன் காதல் பொல்லாதடி-பார்வதி
உந்தன் தேவதாஸ் நானடி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-17-05-2023

# காதல் காலம்

---

கவர்ச்சி காட்டும் அழகு மங்கையரால்
ஆண் மனங்களிலோ பாலுணர்வின் கிளர்ச்சிகள்
காம பாணத்தின் தாக்குதல்களால்
மோகராகத்தின் ஆனந்த தாண்டவங்கள்.
இது காதல் காலம்

இயற்கை பூத்துக் குலுங்கி இனம் பெருக்க
வருடத்தில் ஒரு முறை வரும் வசந்தகாலம்-
மானிடம் பல்கிப் பெருக-வருடம் முழுதும்
மாறாத காதல் காலம்.
காதலும் வரமே, காமமும் பெருங்கொடையே

ஆண் மனம் அலைபாயக்- காமம்
தூண்டும் ஓமோன்களோ குருதியில் பாய
மது தராத போதையை மாது தர
தள்ளாடும் மனம்-மோகினியாய்,
தேவதையாய் தோன்றும் பெண்ணினம்

கள்ளின் போதையும் காலையில் மறைந்திடும்
கண்டு வரும் காமத்துப்பாலின் போதை
காலமெல்லாம் நெஞ்சை வருத்திடும்
காதலில் விழுந்த மனம் மயங்கி கவிபாட
காமத்துப்பாலின் தீராத போதைகள்

அழகு பெருங்கொடையே-
அச்சம், மடம், நாணம் பெண்மையின் பெருநிதியே
மண், பொன், பெண் எனும் ஆசையின் வரிசையில்
பெண்ணும் ஒன்றானது ஆணினத்தின் சதியே

புண்ணிய புருஷரும், அவதார புருஷரும்
போற்றி வணங்கியது பெற்ற தாயையே
தாயின் காலடியில் சொர்க்கம்
கன்னியர் அழகினிலோ பொன்மானின் மயக்கம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-17-05-2023

# காதல் கங்கை

---

நான் பார்த்து பரவசமான- முதல் அழகு மங்கையும் அவள்தான்
என் மனதிற்கு காதல் சொன்ன முதல் தேவமங்கையும் அவள்தான்

முதல் மனிதனைக் கண்ட மங்கைபோல் மனமோ கடலாய்ப் பொங்கி,
புதுமலாராய் பூத்து பௌர்ணமி நிலவாய் ஒளிர்ந்திட-அவள்
இதயமெங்கும் காதலின் வண்ணங்கள் -என்னைக் காணும்போதெல்லாம்
பொன்னுடலில் மின்னும் செவ்வண்ண நாணக்கோலங்கள்

கவிதைப் பரிமாறலாய் விரிந்த உறவு, காதலை பரிமாறத் துடிக்க
என் மனமோ காதலை மறந்து கடமையில் மூழ்கித் திளைக்க
கல்லும் கனியாகிட-கல்லுக்கும்
காதல் அபிஷேகம் செய்தாள் பூங்கோதை

இதயவீணை தேவராகம் இசைக்க
இதயமோ காதல் கனவுகளில் லயிக்க
காதலுக்காய், மங்கையோ தவமிருக்க
கண் மறைந்த ஏழைக் கவிஞன்.

இதயவீணையின் தந்திகள் அறுந்திட
இதயமோ இறகொடிந்த பறவையாய்த் தவித்திட
தேவராகம் வாசித்துப் பூரித்த மனம்
முகாரியை மௌனத்தில் இசைத்து தவித்த இனம்

காதல் கணைகளும் வீழ்த்தாத நெஞ்சம்
கவிஞன் உள்ளத்தில் தேடியதோ காதல் தஞ்சம்
பூபாளம் பாடி மகிழ்ந்த பூவை
காதற் தீயில் கருகிச் சருகான பாவை

ஒற்றை குயிலாய் உள்ளம் கரைய, பூவிழிகளிலோ வற்றாத கங்கை
நெஞ்சினிலோ காதல் தீயின் காங்கை

திரை கடல் ஓடித் திரவியம் தேடிக் கவிஞனும் கண் மறைந்திட,
காதலுக்காய் தவமிருந்த கட்டழகன் கன்னி மனதை தொட்டிட
கைத்தலம் பற்றிக் கணவணாய் வரித்த மங்கை-காதலை
காகிதத்தில் எழுதிய கவிதையாய் கசக்கிப் போட்ட நங்கை

ஏழைக் கவிஞனுக்கோ எல்லாம் மாயையானது
பாலையில் பொன் மானும் கானல் நீரானது-பருவமங்கையின்
காதலோ பருகக் கிடைக்காத அமிர்தமானது

காதலின்றிக் கவி நெஞ்சம் வாட
புது மஞ்சமோ தீயாய் வாட்ட
காதல் கவியெழுதி பொழுதை கழிக்கும்
கண்ணீர் பொழுதுகளாய் வாழ்வு

அந்தியில் ஆறிட்ட காதல் காயங்கள்-குருதி
பீறிட அவள் காதலைச் சொல்லியழும்
அமைதியிழந்த இதயம் உறவை எண்ணி
ஒற்றைக் குயிலாய் கரையும்

வாழ்வும் சத்தியத் தேடலாகிட
எங்கிருந்தாலும் வாழ்க என்று வாழ்த்தி
எல்லாம் இறை செயல் என்று
அமைதி கொண்ட கவிதை நெஞ்சம்

அமைதி காண போதிமாதவனின் ஞான உபதேசங்கள்
எல்லாம் மாறும் உலகில் எதுவும் நிரந்தரமல்ல
வாழ்வின் யதார்தங்கள்
வாழ்வே மாயமானது.- காதலும்
காலத்தால் அழியாத சோகமானது.

மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம்-
இறைவன் ஈயாததும் பெரும் வரம்
காலம் புரியவைத்த ஞானம்
கைகூப்பித் தொழ மனதிலே பேரானந்தம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-17-05-2023*

# காதல் கதை பேசும் நேரமே

---

நிலவொளியில் நீராடும் கடல் மீன்கள்
அலை தழுவப் பொய்கையில் ஊஞ்சலாடும் செங்கமலங்கள்
மலர் தழுவி மகரந்தப் பஞ்சணையில் மதுவருந்தும் வண்டினங்கள்
உயிரே உன்னை எண்ணி உருகும் எந்தன் காதல் நினைவுகள்

அலை அலையாய் கரை தழுவிடும் அலைகளாய்த்
துளித் துளியாய் புல்லில் உறங்கும் பனித்துளிகளாய்
முத்து முத்தாய் அடுக்கிட்ட செம்மாதுளை மணிகளாய்
காதலே என் மனதில் உன் நினைவுகள்

இதயவானில் வானவில்லாய் உன் வண்ணங்கள்
வீணையின் அமுதகானங்களாய் உன் கானங்கள்
சுவாசத்திலோ பூவாசமாய் உந்தன் சுகந்தம்
என் இதயமோ உன் வசம்
என்னுயிராய் உந்தன் சுவாசம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-17-05-2023

# காதல் ஓவியம்

---

படித்த நாவல்களும் பார்த்து இரசித்த திரைப்படங்களும்-
காதலைக் காவியமாய் காட்ட-ஆழ்மனமோ
சித்தன்ன ஓவியமாய் காதலியைத் தீட்ட
கவிபாடிக் களித்த வாலிப நாட்கள்.

கடமையில் மூழ்கிய காளை மனதில் காதலைத் தூவிய அழகி
தனயன் கண்களில் தாயின் தியாகச் சுமைகள் இமயமாய்த் தோன்றிட
முதல் காதலும் பாலையில் விழுந்த விதையாய் மாறிட
காதலால் புண்ணாகி நொந்தே சாபம் ஈந்த கன்னி

என் நெஞ்சத்து வலியை நீங்களும் உணர
காதலில் தோற்பீராக-உங்கள் காதலும்
ஒரு தலைராகமாய் மாறி நெஞ்சை கொல்லும்போது-
என் காதலின் வலியை நீரும் அறிவீராக.

வருடங்கள் பலபோனபின் பருவங்கள் பல மாறிட
காதலும், கனவுகளும் கானல் நீராய்க் காய்ந்திட
மனதிலே வெறுமை-நெஞ்சிலே
முதல் முதலில் ஆதாமின் தனிமை.

எண்ணித் துடிக்கும் என் மனது-இறகிழந்த
வண்ணப்பட்டாம் பூச்சியாய் மண்ணில் விழுந்து தவிக்கும்
கண்ணில் வடியும் நீர்த்துளிகள்
காதலின் வலியை சொல்லித் துடிக்கும்.

துடிக்கும் இதயம் அவள் சொன்ன காதலை எண்ணித் தவிக்கும்.
விதியை நொந்து சலிக்கும் மனம் நிம்மதி தேடிக்களைக்கும்.
ஒரு பொழுது வாழும் பூக்களுக்கு காதல் சொல்லும் தேனீ
இரவில் மலரும் அல்லிகளுக்கும் கவிதை சொல்லும் வான் மதி

கூவும் குயிலும், கொஞ்சும் கிளியும், மாடப்புறாவும்,
மைனாவும் சோடியாய் உலாவிட,
கிட்டாத வரமாய்-கன்னி இட்ட சாபமாய்
மாறிட்ட காதல் என்னை மெல்ல கொல்ல
தனித்திருக்கும் போதும்-நள்ளிரவில்
தூக்கம் கலைந்து விழித்திருக்கும்போதும்
வாட்டும் அவள் நினைவு
வருத்தும் அவள் பிரிவு

காதல் தேவதையை பாடித் துதிக்கும் பக்தனாய் இதயம்
கவிதைப் பூக்களைச் சாத்தி-கண்ணீரால்
காதலைக் காயாமல் வைத்திருக்கும் நெஞ்சம்

ஊர் காணத் தொடுத்த கல்யாண மாலை
சூட உறவின்றித், தனியே வாடி உதிர
நீர் தேடும் வேர்களைப்போல்-அவள்
நினைவைத் தேடி அலையும் நெஞ்சம்

பூ மகள் மணவாழ்வும் பொழுது சாயுமுன்
மணமிழந்த மலராய் வாடி உதிர்ந்திட,
என் காதல் கோயிலும் தேவதை இன்றிப் பாழ்பட
விதி எழுதிடும் துன்பியல் கதையாய் வாழ்வு
இன்றும் நெஞ்சில் ஈர விழிக்காவியமாய் காதல்

சூடாத மலராய் வாடிப்போகின்றேன்-
காதல் நிலவே உன்னைக் காணாத
அமாவாசை இருளில் மூழ்கி மடிகின்றேன்
என் காதலே என் காதலே
ஏன் என்னை கைநெகிழ்ந்தாய்?

பாடி அழைக்கும் நெஞ்சம் -நீயின்றி
நாளும் வாடிக்கிடக்கும் மலர் மஞ்சம்,
பருவங்கள் மாறிட உடலிலே முதுமை
உள்ளத்திலே ஆனந்த அமைதி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-17-05-2023*

# காதல் செல்லும் பாதை

---

காதல் மணம் வீசிக் கடந்துபோகையில்
கடைக்கண்ணால் என்னைத் தழுவி
காதல் சுரம் தந்தாய்-நோயும் நீ- மருந்தும் நீ
நோகுதடி என் மனசு இளமானே

கண்களும், கண்களும் தழுவிக்கொள்ள
காதல் தீப்பொறியோ-என் “இதயத்தை பற்றிக் கொல்ல”
அணைக்கத் தெரியாமல் தவிக்கின்றேன்
உன் ஒரு அணைப்பிற்காய் துடிக்கின்றேன்

குனிந்த தலை நிமிராமல் நடந்துவந்து-சட்டென்று-
நிமிர்ந்து குறுநகை உதிர்த்தாய்
கோலவிழிகள் என்னைக் குத்திக்கொள்ள
ஒரு பார்வை பார்த்தாய் காதல் சதிகாரி
என் இதயம் வலிக்குதடி

மலர்க்குடங்கள் தாங்கிய மார்போடும்
நீர்குடம் தாங்கிய கொடியிடையோடும்
நிறை குடம் நீ குலுங்கி நடக்கையிலே
குறைகுடமாய் தளும்பித் தவிக்குதடி
காதல் கொண்ட என் இள மனசு

கொலுசோ, காதல் போர்முரசு கொட்ட,
வேல் விழிகளோ, என் நெஞ்சை குத்திக்கொள்ள,
செவ்விதழ்களோ முத்தவெள்ளத்தில்
என்னை மூழ்கடிக்கத் துடிக்க
பூக்கரங்களோ என்னைச் சுற்றி முற்றுகையிட
மலர் மஞ்சமோ நாணிச்சிரிக்க
ஏனடி இந்தப் பொல்லாத போர் வெறி
இளமனசு கொதிக்குதடி-உன் படையெடுப்பை
பஞ்சணையில் சந்திக்க நெஞ்சு தவிக்குதடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-17-05-2023

# காதல் தீ

---

கண்களும், கண்களும் உரசிட மூண்டிட்ட காமத் தீ
என் உயிரையும், மெய்யையும் ஒன்றாய்த் தீய்க்குதடி தோழி,
கண்களால் காதல் தந்தவனை காதலாகி
நெஞ்சம் கனவிலும் தேட-இதயம்
காதல் தீ பற்றி எரியுதடி

இவன் அணைத்தால், அணையாத் தீயும்
அணையுமென்று மனமும் கூற,
மாதவிக் கொடியும் உலர்ந்து வாட
மன்மத பாணங்களோ நெஞ்சைத் தாக்க
அவன் வருவானா தோழி?
கட்டியணைத்து காதல் தீ வளர்ப்பானா?
இல்லை அணைப்பாணா?  சொல் என் தோழி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-17-05-2023

# காதல் வைபோகமே

---

காதலான நெஞ்சம்- கன்னியின்
கடைக்கண் பார்வைக்காய்த் தவமிருக்கும்
வேண்டுதலாய் அவள் சந்நிதியில்-நாளும்
காதல் கவிதைகள் அரங்கேறும்

வேல்விழியால்-என் நெஞ்சில் காதலின் ஆறாத விழுப்புண்கள்
கிட்டாத தேவி தரிசனம் நாடி-தெவிட்டாத காதலோடு
நாளும் என் கண்ணீர்த் தவங்கள்

மோகனப் புன்னகையால்
என்னைக் கொள்ளை கொண்ட காதல் ராட்சசி
பூவிதயத்தை ஆட்சி செய்யும் காதல் வித்தகி
கடைக்கண் பாரடி காதல் சொல்லடி

கன்னிப்பூவே, காமன் மகளே
கொஞ்சமேனும் காதல் தருவாயா
கெஞ்சி கேட்கிறேன்-கொஞ்சிப் பேசிட
உன் நெஞ்சைத் தருவாயா?

தவமாய்த் தவமிருந்து வாடுகிறேன்
காதல் தேவதையே மனமிரங்கு.

பூவிழிகளும் தழுவிப் புன்னகையால் காதல் சொல்ல
பொன்மகள் பூ வாசமும் சுவாசத்திற்கு வாசம் பூச
கானக்குயிலாய் கவிபாடி, தோகையாய் நடனமாடிக்
கன்னி மனதை காதலால் கன்னமிட்டுக்
கொள்ளை கொண்ட காதல் மனம் களிக்கும்

காதலே -உன்னோடு இருக்கையில்
ஒரு யுகமும் ஒரு நொடியாய் கழியுதடி
உனைப் பிரிந்து தவிக்கையில்
ஒரு நொடியும் பல யுகமாய் கனக்குதடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-17-05-2023

# காதலுக்கு மரியாதை

---

**க**ண் வழி நுழைந்து நெஞ்சுக்குள் புகுந்து காதல் தந்தாள்
காதல் வாசம் சுவாசத்தை நிறைக்க, பூமணம் இதயத்தில் மணக்க,
புதுச்சுடர் இருளைக் கலைக்க, கனவுகள் எனக்குள் விழிக்க
காதல் தீபத்தை ஏற்றி வைத்தாள்
காதல் மரங்கொத்தி என் மனம் கொத்திப்பார்த்து
நெஞ்சில் காதல் கூடமைத்தாள்.



கனவுகள் பிறந்திட, கவலைகள் மறைந்திட
வண்டும் மலரும் கொண்டாடும் வசந்தவிழா
காதல் கிளிகளாய் சோடி சேர்ந்த உள்ளங்கள்
வானம் பாடிகளாய் பாடி மகிழும் இதயங்கள்

இன்பமாய் வாழ்ந்த நாட்கள், இனிய
கனவாய்க் கலைந்திட,
நெஞ்சிலே காதலின் ஆறாத ரணம்
இதயமோ வாடிக்கருகிய பூவனம்

சுடுமணலில் விழுந்த புழுவாய் நெஞ்சம் துடிக்க
சட்டெரிக்கும் சூரியனாய்ப் பிரிவும் வருத்த
கண்ணில் நிறைந்தவளே கண்மறைந்து போனாள்
நெஞ்சில் நிறைந்தவளே நிம்மதியை எடுத்துச்சென்றாள்.




தேனிலும் இனிதான என் அன்பை
ஏனோ மறந்தாள்- ஏழ் கடலிலும் ஆழமான
என் காதலை ஏனோ துறந்தாள்.

ஏனடி என்னைப் பிரிந்தாய்-
ஏனடி என் நெஞ்சில் காதலை விதைத்தாய்?
மறக்க துடித்தும் முடியவில்லை-உறவைப்
பிரிக்க முனைந்தும் முடியவில்லை

செவ்வரி படர்ந்த விழிகளில் நீர் மலர்கள் பூத்திருக்க
செங்கமல முகத்தில்-சோகப் படர்தாமரையாய்
கருந்தாடி மூடிக்கிடக்க
பாலை மணலில் வீழ்ந்து கிடந்தான்
பட்ட மரமாய் வாடிக்கிடந்தான்- மஜ்னு

பொன்மேனி தொட்டபோது, கன்னம் சிவக்க,
கருவிழிகள் நாணிக்கிறங்க, கட்டிக்கொள் என்னை
கட்டிக் கரும்பாய் கடித்துக் சுவை
பஞ்சைப் பற்றிய நெருப்பாய் படர்ந்து என்னை எரித்துக்கொல்
பழரச மதுவை இதழ்களில் பருகிக் கொள்-என
நாணி அபிநயம் காட்டும் நீலநயனங்கள்



காதல் தீயில் மெய்யும் கருக, எரியும் மெழுகாய் இதயம் உருக
துடித்து களைக்காத இதயம்-அவளை நினைத்து களைக்க
அணைத்து மகிழ்ந்த மெய்யும் அனலில் பட்ட மெழுகாய் வெந்து உருக
தூக்கம் மறந்த விழிகள் துக்கித்து கண்ணீர் வடிக்க
ஏங்கித் தவிக்கும் இதயம் பெருமூச்சில் ஆவியாய் கரைய
ஏனடி என்னை மறந்தாய்?

மலர்சூடும் மாதே, என் மனவானின் முழுநிலவே
நீயின்றி காயும் என் வானம் காரிருளாய் போனதடி
மலர்த்தேனின்றி- காதல் பூந்தேனி பசியால் வாடுதடி

ஒவ்வொரு துடிப்பிலும்-இதயம் தவிக்க
ஒவ்வவொரு பெருமூச்சும் அனலைப் பொழிய
கனவால் மலர்ந்த இரவும், கண்ணீரால் ஈரமான மஞ்சமும்
என் காதலைச் சொல்ல ஏனடி என் நெஞ்சில் மலர்ந்தாய்?




காதலுக்கு மொழி ஏது ? மதமேது?
கண்பார்த்து நெஞ்செழுதிய காதல்
கண்ணீர்க் காவியமோ? குருதி வரைந்த ஓவியமோ?

உனக்காய் பூத்த இதயம் வாடிக் களைக்க
நெஞ்சை நிறைத்த நேசம் துடித்துத் தவிக்க
இரு விழிகளிலும் நதிகள் பிறக்க
ஏனடி இந்த சோதனை, மாறாத வேதனை?

நினைக்கச் சொன்னவளே என்னை மறக்க சொன்னாள்
பழகிக் களித்தவளே விலகிப்போனாள்.

நிலவை காணும்போது -மனமும் நோகும்
மலர்களை பார்க்கும் போது விழிகளில்
கண்ணீர்ப் பூக்கள் உதிரும்

ஒற்றைக் குயிலாய் இதயம் கரைந்து உயிரை வதைக்க
உன்னை பிரிந்தபொழுதெல்லாம் உயிரை பிரிந்து வாடும் துயரம்
வேரறுந்த மரமாய் சாகும் அவலம்

அன்பே லைலா நீ எங்கே? என் நினைவும் உனக்காய் அலைய
நிம்மதியோ எனை விட்ட அகல ஏனடி என்னைப் பிரிந்தாய்?

தகிக்கும் சுடுமணலில் தள்ளாடி நடந்து விழுந்து, எழுந்து
லைலைா லைலைா என வாய் புலம்பும் மஜ்னுவை
மன்னனும் கண்டான் மனமிளகி நின்றான்.



காதல் தோல்வியால் கலங்கி அழுகிறான் காளை
மன்னனுக்கு மந்திரி பதில் கூற
கன்னி ஒருத்திக்காய் வாடும் காளை கண்டு
காவலனும் வியப்பிலாழ்ந்திட
பெண்ணுக்காய் புலம்பும் பேதையை
அழைத்து வாருங்கள் என்றான் அரசன்

மண்ணுக்காய், பொன்னுக்காய், மணிமுடிக்காய் போரிட்ட
மன்னர்கள் உண்டு, பெண்ணுக்காய் புலம்பியழும்
பேதை கண்டு வியந்தவனும் நகைத்தே
"மதுவின் போதை நாமறிவோம்
அழகு மங்கையர் போதையும் நாமறிவோம்

ஒரு மாதிற்காய் புலம்பும் பேதையே
ஒரு பெண்ணிற்காகவா இந்த கண்ணீர்
ஒரு பாவைக்கா இந்தப் பைத்தியக் கோலம்

அழகு மங்கையர் கூட்டம் சூழ அட்டகாசமாக
நகைத்த மன்னன், "மஜ்னு பெண்தானே வேண்டும்
என்னை சூழ்ந்த நிற்கும் பேரழகிகளில்
ஒருத்தியை தருகிறேன் பெற்றுக்கொள்"

வரிசையாய் நின்ற அழகிகள் எல்லாம்
வடிவிற்கு இலக்கணம் சொல்ல, வானவில்லின் வண்ணம் காட்ட
அடி தொட்டு முடிவரை அழகைப் பாராட்ட
ஆணிப்பொன்மேனியும், அழகு நடையும், பொங்கிய அழகும்,
பூரித்த மார்புகளும் கார்குழலும், கருவிழிகளும்
சிற்றிடையும், செம்பவள இதழ்களும், முத்துப்பற்களும்,
மோகன சிரிப்பும் கண்டே ஆடவர் மனமும் ஆட்டம் காண
விழிகளுக்கோ அழகின் விருந்தோம்பல்
வியந்து நின்ற கவிகளின் புலமைக்கோ அழகின் அறைகூவல்

விழிபட்டு சிவந்தனவும், மொழிகேட்டு கனிந்தனவுமாய்
கன்னியர் அழகு கண்களை மயக்கி நெஞ்சங்களைக் கொல்ல
கண்டவர் சிந்தையிலே காமனும் குதுாகலிக்க

பார்த்தவர் மீண்டும் பார்க்கத் தூண்டும் அழகையும்
பாராதவனாய் என் லைலா வேண்டும்
என் லைலா வேண்டும் அழுது புலம்பினான்
அழகைக் கடந்த அழகிய காதலன் மஜ்னு

அசந்த மன்னனும் அழகிலும் அழகோ உன் லைலா
அசத்தும் பேரழகோ-ஆச்சரிய அழகோ? அவளைக் காணவேண்டும்
கண்கள் அழகைப் பருகவேண்டும் கட்டளை பிறக்க படைகள் பறக்க
பாவையும் தோன்றினாள் பார்த்திபன் அவையில்.

பார்த்த மன்னனும் திகைத்து
உசிசி முதல் பாதம் வரை –அணங்கிடம்
அழகெனச் சொல்ல ஏதுமில்லை
சுந்தரியல்ல, மோகினியல்ல அழகினைச் சொல்ல
தேன்மோழியல்ல, தேவதையல்ல,
மேனி காஞ்சனமல்ல, விழிகள் கயல்களுமல்ல
கனிரசம் பருக செவ்விதழ் அல்ல



பார்வையால் அளந்தவன் பாவையின்
அழகால் நிலைகுழைந்து கேட்டான்
மஜ்னு இவளா உன் காதலி
இவளுக்காகவா இந்த வேதனை, புலம்பல்?

பார்த்த விழிகளும் பழரசத்தை சுவைக்க
பருகிய இதயமும் பாவையின் போதையில் தள்ளாட
இமைகளும் தடையென ஏங்கிச்சோர
இதுவரை அறியாத இன்பத்தை இதயம் சுவைத்து களிக்க
மெய் மறந்து நின்ற காதலர் கண்டு காவலனும் கண் வியந்தான்.

மன்னவன் கேள்வியால் புன்னகை மலர
மன்னவனே மாதர் மேனி சுகம் தாங்கள் அறிவீர்
மாதர் மனம் கவர் காதலனாய் வாழ்ந்திருந்தால்
காதலின் சுகம் நீரும் அறிந்திருப்பீர்

மாதரசி காதலை நீங்கள் அறியீர்
மஜ்னுவின் காதலைக் காண மஜ்னுவின் இதயம் வேண்டும்-மன்னா
காதலைக் காண-காவலனே காதல் கண்கள் வேண்டும்

காதல் இதயம் சார்ந்தது -உடல் கடந்த அழகைக் காண
காதல் இதயம் வேண்டும்
அரசிருந்தும், அழகு மங்கையர் இருந்தும்
காதலை நீங்கள் அறியாத பரிதாபம்





காதலே காதலை அறியும் காவலனே
காதல் அறியாத இதயம் தங்களது
உம் அரசில் நீர் மன்னவன்
என் காதல் உலகில் ஏழை நான்
காதல் மன்னவனே!

மண்ணரசைக் கைப்பற்ற மாபெரும் படைபோதும்
மாதரசிகள் பூ மனதைக் கைப்பற்றக்
காதல் இதயம் வேண்டும் மன்னா
காதல் இரு இதயங்களின் சங்கமம்
காமம் இரு உடல்களின் கூடல்

கவர்ச்சியின் பாதையில் காதல் இல்லை, ஊடலின் இன்பமில்லை
ஒருவர் ஒருவருக்காய்  உருகிக்கரையும் இன்பத் தவிப்பில்லை
மதுவுண்டு, மாதர் சுகம் கொள்ளும் போதை காமுகருக்கே
உள்ளம் கரைந்து உள்ளம் கொள்ளைபோகும்
இன்பம் காதலுக்கே-காவலனாயிருந்தும்
காதல் சுகமறியா ஏழை நீ மன்னா-ஏழையாயிருந்தும்-
காதலர் உலகில் பெருஞ் செல்வன் நான் மன்னா

காதலை சுவைத்த இதயம்
வானவர் அமுதைச் சுவைத்த இன்பம் கொள்ள
மன்னவனும் தன் மனவெறுமை அறிந்து
காதலுக்கு மரியாதை செய்தான்.




**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-17-05-2023

# காதலும் கண்ணீரும்

---

அண்ணலும் நோக்கினான்-அவளும் நோக்கினாள்
கண்கள் கலந்து மகிழ்ந்து காதல் சொல்ல
கண்பார்த்து நெஞ்செழுதும் காவியமாய் காதலும் மலர-
கானகம் போனாள் ஸ்ரீராமனைப் பிரியாத சீதை.

சிறையிருந்து, தீக்குளித்த சின்ன இதயமும் நொருங்கிட
ஸ்ரீராமனும் கர்ப்பிணித் தாயை கானகம் அனுப்பி
இராஜநீதி காத்திட, காதலும் கனவாகி,
கண்ணீரோ பிரியாத உறவாகிட
தந்தையும், பிள்ளைகளும் ஒன்றாய்க் கெஞ்சியும்
***காதல் தந்த வரம் சாபம் என்றோ தாய் சீதையும்***
பூமித்தாய் மடி சேர்ந்து உறவைப் பிரிந்தாள்.

கண்ணகியைக் கரம்பிடித்து, மாதவியின் பேரழகில்
மயங்கிட்ட காதல் கள்வன் கோவலனும்
கள்வனாய்க் கொலையுண்டான்-சிதறிய
காற்சிலம்பிலோ மாணிக்க பரல்கள்-சிந்திய
கண்ணகியின் விழிகளிலோ கண்ணீர்ப் பரல்கள்

அழகை கேட்டு அசந்தவனும் அன்னம் விடு தூதால் காதலாகி
அன்ன நடையாளை கைபிடித்தான், சூதால் நாடிழந்தவனும்
கானகத்தே காதலியை கைவிட்டோடி கண்ணீரில் மூழ்கடித்தான்

ஐவருக்கு மாலையிட்டவளுக்கு அவையில் மானபங்கம் வந்தபோது
துணைவரும் கைவிட்ட அவலம், மாவீரருக்கு மாலையிட்டவளும்-
கண்ணீர் மாலை சூடி கண்ணனை கூவியழைக்க
மாதவனே மானங்காத்த அதிசய மங்கலம்

கல்யாணங்களும்-விவாகரத்தில் முடிந்திட
மாங்கல்யமும் வெறும் கயிறாய் போனது
மணவாழ்வும், கல்யாண மாலையும்
மாலை வருமுன் வாடிடும் மலராய் ஆனது.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-18-05-2023

# கற்பும் காதலும்

---

காதலைக் கவிதை சொல்ல- காமத்தை
கட்டழகு உடல்கள் கலந்து
இரசித்து, ருசித்து தம்மை மறந்து படிக்க
காமப்போதையில் மதனகாவியத்தை
மன்மதனும், ரதியுமாய் எழுதி முடித்தார்
காதசூத்திரம் மன்மத காவியம் என்றார்

கருப்பையில் சிசுவும் வித்தாய் முளைக்க,
கற்பு முக்கியம் கண்ணே கருக்கலைப்பு செய்
காதலன் சொல்கிறான் கல்யாணம்
உனக்கின்னும் ஆகவில்லை கண்ணே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-18-05-2023

# ஸ்ரீராமன்-சீதை-இராவணன்

***கணைபட்டு நோகாத என் மனம்-கன்னி***
***கண்ணடி பட்டு நொந்ததே-ஸ்ரீராமன்***
***என் நெஞ்சும் காதல் காயமானதே***





பார்கத் தவித்துப் பார்த்துக் களித்ததுவும்
காணத் தவித்துக் கண்டு குதூகலித்ததுவும் -காதலாக
வண்ணமும், வாசமும், சுவையும் பூக்களில் கண்டேன்-என்
ஐம்புலனையும் ஆறறிவையும் மயக்கும் பேரழகுப் பூவாய்
ஜனகன் மகளைக் கண்டே காதலில் விழுந்தேன்

நம்பியும் நோக்க, நங்கையும் நோக்கினாள்
நாணத்தால் நங்கை முகம் செங்கமலாமாய்ச் சிவக்க
பங்கயம் இவள் என்றெண்ணி தேன் தும்பியும் மொய்க
அண்ணலைத் தழுவி அடைக்கலம் என்றாள்

அவனும் தழுவிட நாணிய நங்கையும் தழுவி இன்புற
இன்பம் பொங்கிட அணைப்பில் துடித்த இதயங்கள்
களிப்பால் இடம் மாறிடப், பார்த்துக் கண்மயங்க
பூத்த எழிலில் மனம் மயங்க
காதலும் பிறந்ததே-காமன் கணையும்-
இதயங்களை துளைத்து இன்பம்
பேரின்பம் காதல் என்றதே!



நாணிச் சிவந்த மேனியோ-செம்மாங்கனி
வானில் கலந்த நீலமோ ஸ்ரீராமன் கருமேனி
வண்ணக் கருமையும், வாசச் செம்மையும்
மங்கலவணி பூண்டு, மணவாழவில் இணைய
மன்னரும், மாதாக்களும் மகிழ
முன்னை வினை தீர்த்த முனிகளும் வாழ்த்த
மங்கலம் பேரிகை முழங்க
கணவன் இவன் என வரித்த மங்கை



காடேகும்போதும் கணவனை பிரியாது
காடுசென்ற மிதிலையின் மைதிலி
கணவனோடு நடக்க கல்லும், முள்ளும்
மலர் பாதையாக-தேன் நிலவாக
துள்ளும் உள்ளம் குயில் தோப்பாக
கூவிக்களித்த இன்பக் காதலியர் வைதேகி

கூவிக்களித்த புள்ளிக்குயிலும்-
அசோகவனத்தில் கூண்டுக்குயிலானது
பல்லாண்டு சிறையிருந்த எழில்
வாசம் குன்றாத பூம்பொழில்

வாடாத மலர், வாட்டும் தீக்குளித்து
வண்டு மொய்காத பூஞ்செண்டாய்க் காட்டி
கொண்டவன் தாள் பணிந்தது.

வண்ணான் மொழி கேட்டு வாடிய-ராஜாராமன்
மகாராணி காடேகுதல் நீதியென்றே தம்பியைப் பணித்து
தாங்கொண்ணாத் துயரில் சீதையைப் பிரிந்து
சீதா ராமனாய் காதலில் தவித்தான்



காடு சென்ற கர்ப்பிணியும், சுகம் துறந்து, சோகம் பூண்டு
லவ, குசனுக்குத் தாயாக-யாகப்பரி மீட்க
காடு வந்த மன்னனும் -காணாத
உண்மையைக் கண்டு கலங்கி நின்றான்

தேடி வந்த மன்னனையும்-இனியும்
தேவை இல்லையென்றோ அன்னை சீதை துறந்தாள்
மண் பிளக்க மாதா மடி அழைக்க
மாலையிட்ட மணாளனைத் மங்கை பிரிந்தாள்





காதல் ரோஜாவை மாலையிட்டபோது
ஸ்ரீராமன் மனமோ மணக்கும் ரோஜாவனம்
மாலையிட்ட மங்கை பிரிந்தபோது
ஸ்ரீராமன் மனமும் சீதையில்லாச் சோகவனம்

அசோகவனத்தில் சீதையின் சிறைவாசம்
சோகவனத்தில் ஸ்ரீராமனின் தனித்த வனவாசம்
நெய் வளர்த்த தீயில் நீ நீராடியதோ ஒரு முறை
சோகத் தீயில் என் நெஞ்சம் வேகுவதோ
எண்ணிச் சொல்ல எண்ணில்லை கண்ணே
என் இதயத்தில் உன்னைத் தவிர யாருமில்லை

நேசமே!உனைப் பிரிந்தபின் வாசமில்லா
மலரானேன் காதலே உனை இழந்தபின்
அனலில் விழுந்த புழுவானேன்.





சிவதனுசை வளைத்து முறித்து
சீதையின் கரம் பிடித்த ஸ்ரீராமனும்
சீதையின் மனதை முறித்தான்

கனவு வளர்த்த கன்னி மனமும் -தனியே
காடேகி ஆறாக்காயமானது-கர்ப்பிணியும்
தாயாகித் துயராகித் ஸ்ரீராமனை விலக்கியது
காவியகாலத்து விவாகரத்து என்றானதே?
புண்பட்ட தாய் மனதில்-காயங்கள் ஆறவில்லை
வனம் வாழ்ந்த வாழ்க்கை தொடர்கதையான நிலை

அள்ளிக் கொடுத்த அன்பிற்கு
ஆறுதல் சொல்லத் தெரியவில்லை.
விலக்கத் தெரிந்த உறவிற்கு
இணைக்க -ஶ்ரீராம நீதி கைதரவில்லை?

காடு போன ஶ்ரீராமனோடு தம்பியும் போனான்-
கணவனே தெய்வம் என்று தேவியும் போனாள்
காடுபோன கர்ப்பிணியோ தனியே போனாள்
நம்பிய நம்பியும் போகவில்லை நங்கை மனம்
கண்ணாடியாய் நொருங்கிய நிலை





ஶ்ரீராமன் காடேகக் கூனி, கைகேயி மனங்களே காரணம்
தாய் சீதை காடேக- ஶ்ரீராமனே காரணம்.
மண்ணாளத் தெரிந்த மன்னவனுக்கு
மனையாளின் தூய உள்ளம் புரிந்தாலும்-புரியாத
பாவம்.-ராஜாராமனுக்கு நீதியே உயர்ந்த தவம்

நெய் வளர்த்த தீயில் நீராடி வந்தவளைத் தீயும் சுடவில்லை
பொய் வளர்த்த தீயை மெய்யென நம்பிய
ஶ்ரீராமனை உண்மை சுடத் தவறவில்லை
தாரமே அவதாரத்தை பிரிந்த நிலை

கண்பார்த்து நெஞ்செழுதிய
சீதை ஶ்ரீராமன் காதலும் பொய்யானதே?
எள்ளிருக்கும் இடமின்றி உயிரிருக்கும் இடம் நாடி
இராமபாணம் தேடியும் காணாத-
இராவணன் காதல் அவன்
உயிரிலும், ஊனிலும் கலந்த ஒன்றானதே!





காதலுக்கு சீதை கொடுத்த விலை பெரிது
**ஶ்ரீராமன் நிலையும் பெரிது**
காதலுக்காய் உயிர் கொடுத்த
இராவணன் நிலை பெரிதிலும் பெரிதோ?
ஶ்ரீராமன், பரதன். வசிட்டர் இருந்தும்
இராம ராஜ்யத்தின் நீதி
சீதைக்கு இழைத்த அநீதியே?



***ராஜா ராமனுக்***கு நீதி காதலினும் பெரிதானது
இராவணனிற்கு காதல் நீதியிலும் பெரிதானது
ஒரு தலைக்காதலால் இவன் வீழ்ந்தான்
உண்மைக் காதலால் சீதையும் உயர்ந்தாள்.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-23.09.2021*

# சமாதி

---

கண்டு , கரைந்துருகி, உடல் தழுவி
இதழ் சுவைத்து , மெய் மறந்து
கார்குழல் நீவி, கன்னம் சிவக்க முத்தமிட்டு
கனி முத்தம் கொடுத்து வாங்கி
காஞ்சி இருக்கக் கலிங்கம் கலைந்த கதையானோம்

உயிர்மூச்சால் உடல் அளந்து, உவகையால்
உச்சி மோந்து, பார்வையால் பார்த்துக் களித்து
ஒருவரை ஒருவர் உண்டு குடித்து மயங்கிட
பஞ்சணை சுகம் தரும் காமதேவியை
தொழுது, அணைத்து, முத்தபிவேஷகத்தால்
மனம் குளிர்வித்த அர்ச்சகன் நான்

கத்தும் கடமேலும் பொங்கிடக் காமவேதம் ஓதி
கன்னியும் நாணிட, காதலும் கூடிடக்-காமத்துப்பாலை
ஈருடலும் ஒருடலாகிட எழுதிக்களித்து
இன்புற்று, நெஞ்சம் களிக்க, இன்னிசை ஒலிக்க
ஒன்றுக்குள் ஒன்றாகி அத்வைதமானோம்
ஆனந்த சமாதி கூட அர்தநாரீஸ்வரரானோம்.

கடலும் நதியும் கூடும் சங்கமத்தில்
ஆனந்த தாண்டவாமாடி நின்றோம்
கலாபமயிலாய் ஆடிக், கான குயில்களாய் பாடி
காதலும் புது வேதமே
படைப்பின் பரிணாம கீதமே என்றறிந்தே
தேவாதி தேவர்களானோம்

மனமழிய, உடலும், உயிரும், ஆன்மாவும்
ஒன்றாய்க் கரைய சிவசக்தியாய் நின்றோம்
சித்தம், நினைப்பு. செய்கை மறைய
சின்மயமானோம்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-09-05-23

# சந்திப்பு

---

காதல் தேன்மழையே ! வான்பாய்ந்த எந்தன் காதல் நெஞ்சும்
உன் பிரிவால் வற்றிக் காய்ந்ததடி-வண்ணப்பூவே,
வாசமலரே, பூச்சூட உனக்காய் மலர்ந்த பூவனமும்
நீயின்றி நீரின்றி வாடிப்போகுதடி

வானம்பாடிகளாய் பாடிக்களித்த நம் காதலும்,
பல்லவி, சரணமின்றி –ஏழ்மையால்
சட்டென்று, பரிதாபமாய் முடிந்தது ஏனடி

கடைசியாக, கண்ணாளனே ஆசைதீர கண்களால்
என்னைப்பருகி காதல் போதையை தணித்துக்கொள்,
உன் இதயம் வரைந்த காதல் ஓவியத்தை கலைத்துவிட்டு,
அன்பே என்னை மறந்துவிடு

இறுதியாய் என்னை இறுக அணைத்து
எரியும் காதல் தீயை அணைத்துவிடு- நாளை
என் திருமணம் இதுவே நம் இறுதிச் சந்திப்பு.
கண்ணீர் சிந்திக் கதறித் துடித்த அன்றில்கள்

ஏழ்மையால், ஒரு வெள்ளாடாய் அவளும் விலைபோக,
இயலாமையால் , பெற்றோரும் அவளைக் கைநெகிழ,
செல்லாகாசானது அவள் காதல்,
செவிடன் காதில் ஊதிய சங்கானது அவள் அழுகை.

கண்ணீரில் கரையும் காதல் இதயங்கள்,
வெந்நீரில் விழுந்த பொன்மீன்களாய்த் துடிக்க,
காதலும், கானல் நீராய்,
கலையும் வண்ணக்கனவாய் மாறியதே!

சூடிடக் கோர்த்த பூமாலையும் அறுந்து, புழுதியில் வீழ்ந்திட
-வறுமையால், வரட்டுச் சமூக, மத பாரம்பரியத்தால்.
கொஞ்சி மகிழ்ந்த அன்றில்கள் குமுறிப் பிரிந்து போயின.

காதல் மனங்களை விட-மதமே முக்கியம்,
கதையறிந்த மௌலவியும் கைவிரிக்க,
சூனியமான காதல் நெஞ்சங்கள்.
சூம்பிக் கல்லான சொந்தங்கள்.

ஏழைகளின் காதலை-ஏலமிட்டு, ஏப்பமிடும்
“ஷைலொக்குகளின்” வாழ்வில் காதலும் வியாபாரமே!
ஏழைக் கன்னிகளும் சப்பித்துப்பிட
கட்டிக் கரும்புகளே!

பருந்தொன்றின் காமவிருந்திற்காய் விலைபோன பெண்புறா
ஜோடியை பிரிந்த துயரத்தில் ஆவியைத் துறந்து
தன் அழியாக் காதலைச் சொன்ன ஆண்புறா

இணை பிரியாக்காதலும்-
வறுமையால் தன் துணையை இழந்தது,
அழிவில்லாக் காதலும்-முதலிரவில்
அவள் இறப்பினால், புது பிறப்பானது!
புதுக்காவியமானது.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-09-05-23*

# சீதா இராமன்

---

என் இதயம் முழுவதும்
உனக்காய் எழுதிய கவிதைகள்,
என் இதயத்துடிப்பிலும்
இசையாயக் காதல் உணர்வுகள்.

பொங்கும் கடலைபோல் தூங்காத என் உள்ளம்
புது மலர்போல் நீ சூடக் காத்திருக்கும்,
பொன்னும் மணியும் இல்லாத ஏழை நெஞ்சுக்குள்
உந்தன் காதல் புதையலாய் மறைந்திருக்கும்

என் விழிகள் கண்ட பேரழகும் நீதான்
ஸ்ரீராமனாய் இதயம் தேடிய
என் சீதையும் நீதான்

நீயில்லா என் உலகம் நிலவில்லா வான் ஆனது
கதறும் என் மனக்கடலில்-ஓயாத
உன் நினைவலைகள் பொங்கி என்னை வாட்டுது
ஒற்றைக் குயிலாய் என் மனம் கரையுது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-05-23

# ஷெரிமரமும் சோடிக் கிளிகளும்

---

வசந்தம் வந்தது -ஷெரிமரமத்திற்கு குதூகலம் பிறந்திட,
பூத்த பூக்களெல்லாம் விண்ணில் மலர்க்கோலமிட,
உதிர்ந்த பூக்களெல்லாம் மண்ணுக்கு மாலையிட,
பூமழை பொழியும் பூமரத்தால், வீடே பூவனமானது.

அன்றில் பறவைகளான காதல் பறவைகள்,
கணவன் மனைவியராகி கூடிக்களித்திட,
ஷெரிமரத்தில் காதல் கிளிகள் கூடுகட்டின.

கிளி மொழியொடு-மழலை மொழி கேட்டிட,
காதல் வரமாய் மழலைச்செல்வம்.
வண்ணக்கிளிகளின் கூட்டிலும் சின்னக் கிளிகள்.

ஆடிடும் தொட்டிலும், அழகுமொழி பேசிடும் கிளிகளும்,
பாடிடும் குயில்களும் பரவசமூட்ட-நாளும் கொண்டாட்டம்,
குதூகலமும் பெருகிட, குழந்தையும் வளர்ந்திட
வாழ்வெல்லாம் வசந்தம்.

பருவம் மாறிட, இலையுதிர்த்து ஷெரிமரம் புது அழகெடுக்க,
மூளைவளர்ச்சி குன்றிக் குழந்தையும் அழகிழக்க,
மருத்துவமும் கைவிட்டு, கொடுத்தவனும் மறைந்திட
இடிதாங்கியில்லாத உள்ளங்களில் பேரிடி!

பூக்கமுன் கருகிப்போனது புதுமலர்
பாடமுன் ஊமையானது புள்ளிக்குயில்
ஆடமுன் நொண்டியானது வண்ணமயில்

ஏற்றிவைத்த தீபமும் காற்றில் அணைந்திட,
காத்து நின்ற தெய்வமும் கைநெகிழ்ந்திட,
பூத்துக் குலுங்கிய பூவனத்தில் காட்டுத்தீ.

வரமே சாபமாகிட, பிள்ளைச் செல்வமும்
செல்லாக் காசாகி, சின்னச் சிற்பமும் மூளியானது
கிளையொன்று பட்டுப்போயிட வாடி நின்ற ஷெரிமரம்

பருவங்கள் வந்துபோயிட, பூக்க மறக்கவில்லை ஷெரி
இலையுதிர்த்து நின்றபோதும்-கிளிகள் கூட்டை
மறக்கவில்லை, கொஞ்சிப் பேசுவதை நிறுத்தவில்லை.

ஆண்டுகள் பல கழிந்திட, ஆனந்தம் மறந்த வீட்டை
மூப்பும், பிணியும் முற்றுக்கையிட,
சிறகொடிந்த பறவைகள் மனமுடைந்துபோயிட,
வேரறுந்த பூமரமும் பட்டுப்போகத் தொடங்கியது.

பூமரத்தைக் கறையான் அரிக்க, பெற்றோரைப்
புற்றுநோய் கொறிக்க, வசந்தம் காணாத முல்லையாய்
மனவளர்ச்சி குன்றிய பிள்ளை.

காதல் கிளிகளின் கூட்டில்-காலனின் ஆட்சி
புள்ளிக்குயிலின் பாட்டில் முகாரியின் காட்சி

வாழ்வோ சிலுவைப் பாதையாக-வசந்தம்
பொய்யாய், கனவாய்க் கலைந்த துயரம்,
பூ நெஞ்சே கல்லாகிச் சாவை அழைக்க-காக்கும்
கரங்களோ முள்ளாகிப் பூக்களை அழித்த அவலம்

கொஞ்சி மகிழ்ந்த காதல் வாழ்வில் நஞ்சைக் கலந்த சோகம்,
வண்ணகிளிகள் வாழும் கூட்டில் நோயாய்க் கொடிய நாகம்.

காதலாகி வாழ்ந்தவள் கண்ணுறங்கிட, காதல் தந்த உறவும்
அருகில் தூங்கிட தாலாட்டுப் பாடிய துப்பாக்கி,
தந்தையையும் உறங்க வைத்து, வாட்டிய சோகத்தை விரட்டிய
களைப்பில், எல்லாம் முடிந்ததென்று தானும் உறங்கியது.

ஷெரி மரம் இலையுதிர்த்துப் பட்டுபோயிட,
கிளிகள் கூட்டை விட்டுப் பறந்துபோயிட
இழவு விழுந்த வீடு, பாழடைந்த கூடு

எங்கிருந்தோ பறந்து வந்த குயில் ஒன்று
கிளை அமர்ந்து ஒப்பாரியில் துணையை அழைத்தது.
பின், ஏமாற்றத்தோடு எழுந்து பறந்தது.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-10-05-23*

# சொர்க்கம் நரகம்

---

கன்னியர் பின்னால், காதல் மனம்
அலைகடல் துரும்பாய் அலைந்து களைக்க,
காதற் சுகம் தேடி யயாதிபோல் பரிதவிக்க,
காதலும் கானல் நீராய்ப் போனது-வாழ்வும்
நூலறுந்த காற்றாடியாய் ஆனது.

அன்னையின் காலடியிலோ சொர்க்கமிருக்க
அலைபாயும் மனது-அழகிகளிடம்
அன்பைத்தேடியது

காதல் வந்தபோது வாழ்விலே புதுவசந்தம்
காதலும் கலைந்தபோது வாழ்வே நரகம்
மனதினிலே சொர்கமும் நரகமும்
மாறி மாறி தோன்றிய மாயம்.

காலங்கள் கடந்திடக் மனக்காயங்கள் ஆறிட
மனதிலே ஞானம் மொழியிலே மௌனம்

ஆசைகள் மறைந்து அன்பினால் இதயம் நிறைந்திட
மனம் அழிந்து தூய உள்ளம் தோன்றிட
எல்லாம் இன்பமயமானது.
இறைவா உன் பிள்ளை நான் என மனம்
ஆனந்தக் கூத்தாடுது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-05-23

# உள்ளம் கொள்ளை போகுதே

---

உள்ளம் கொள்ளை போயிட
உருகி நைந்தேன்-அவள் உள்ளத்தில்
உள்ளேனா இல்லையா என்றறிய
என் காதலைச் சொல்ல வழியின்றி
உள்ளம் நெகிழ்ந்தேன்

உள்ளத்தை கொள்ளை கொண்ட
காதல் கொள்ளைக்காரியிடம்
என்னை இழந்தேன், இன்பமாய் வந்து
துன்பமாய் கொல்லும் காதலை
கன்னியிடம் இரந்தேன்

காதல் வெள்ளமிட்ட நெஞ்சில் மோகமுள்ளாய் அவள் நினைவு
காதல் வரமா? இல்லை சாபமா? புரியாத உறவு
இன்றும் நெஞ்சில் நீங்காத அவள் நினைவு

கண்டதும் காதல் கொண்டதும் கயல்விழியைத்தான்
மொழி மயங்கி-செவிகளில்
இசைத்தேன் பாய்ந்ததும்-கனிமொழியாள்தான்

சுவாசத்தில் வாசம் மணந்து
நெஞ்சம் காதல் வசப்பட்டதும்-சுகந்தியால்தான்
எல்லாம் கனவானதும்-வாழ்வு கண்ணீரானதும்
தேவதாஸாய் நான் மாறியதும்
காதல் தந்த பார்வதியால்தான்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-05-2023

# நலம் வாழ எந்நாளும் என் வாழ்த்துக்கள்

'உமா டீச்சர்

---



அன்னை, தந்தையின்றி அநாதையாய் நின்றபோது
என்னைத் தன் பிறவாமகனே என்றழைத்தே
பேரின்பம் தந்த தாயே நீ வாழி.

பள்ளியில் பாடம் சொலித் தந்த போதும்
அன்பையும், அறிவையும் அள்ளிப் பொழிந்தே
என்னை அரவணைத்தாய்
படிப்பு முடிந்த பின்னரும் பாசத்தோடு என்னை
தாயே நீ அரவணைத்தாய், தெய்வம் தந்த கொடையே
என் சித்தம், நினைப்பு செய்கை உள்ளவரை
என் நெஞ்சம உன்னை ஒரு போதும் மறவாது தாயே

அன்பு கொடுத்திட அன்னையுமல்ல
ஆயுள் கொடுத்திட இறைவனுமல்ல
செல்வம் ஈந்திட வள்ளலலுமல்ல -என் தாயே
நன்றி சொல்லி நலமாய் வாழ்த்திடும்
உன் பிள்ளை நான்

என்றும் சுகமாய் நலமாய் பல்லாண்டு வாழ
வாழ்த்திடும் குழந்தை நான்.
கல்விச்செல்வத்தை களிப்போடு எனக்களித்த
தெய்வம் நீங்கள்
இன்றோ அன்புச்செலவத்தை வாரி வழங்கும்
அன்னையாய் நீங்கள்-தாயே நீ வாழி

தந்தை, தாயாய் உங்கள் இருவரின் அன்பு
விடியலில் கதிராய், அந்தியில் நிலவாய்
மாறாத உங்கள் ஆனந்த உறவு-
நூற்காத தவத்திற்கு இறை தந்த வரம் பெரிது
தாய் தந்தையே நூறாண்டு வாழ என் வாழ்த்து

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-05-23

# உன்னைச் சொல்லிக் குற்றமில்லை

---

ஏனடி என்னைப் பிரிந்தாய்? கண் மறைந்தாய்?
என் இதயமோ கண்ணாடிபோல் நொருங்க
என் கனவுகளோ நூலறுந்த காற்றாடியாய் வருந்த
கட்டிய மாங்கல்யமும் கழற்றி வீசிட வெற்றுக் கயிறானதோ?
பூவும், பொட்டும் சூடிய மணவாழ்வும்
பொய்யாய், புளிக்கும் திராட்சையாய் ஆனதோ?

கனத்த இதயமும், கண்ணீர் பூத்த விழிகளும்
சுனாமியும், சூறாவளியும் ஒன்றாய் வருத்தியதைச் சொல்ல
நிலைகுழைந்த என் வாழ்வோ –முட்டின்றி
முறிந்து குலை வாழைபோல் வீழ்ந்ததடி

மனைவி இறந்திட, மழலைச் செல்வங்களோடு
திண்டாடிய வாழ்வில் குலமகளாய் வந்து
விளக்கேற்றி வைத்த மாங்கல்ய சொந்தம் நீ

தாயாய், சேவகியாய் எம் வாழ்வில் கலந்திட
பள்ளி செல்லும் மூத்தபிள்ளை-பருவமெய்திட்ட
சின்னபிள்ளை என, என் குழந்தைகள் வளர்ந்திட-வாழ்வில்
புது வசந்தம் வீசிடத் துணை நின்ற தேவதை நீ

பாசப் பறவைகளாய் வாழ்ந்த காலம்
பருவங்கள் மாறிட முடிந்ததோ?
“பார்கின்ஸன் நோய் என்னைத் தாக்கிட-நின்
பரவசக் கனவும் என்னால் கலைந்ததோ?

இன்பத்திலும், துன்பத்திலும், நோயிலும், நலத்திலும்
வறுமையிலும், செல்வத்திலும் ஒன்றாய் வாழ்வோம்
இணைபிரியாத் துணையிருப்போம் -வாக்களித்து
பூண்ட மணக்கோலம் அலங்கோலமானது

வாக்கை நீ காக்கத் தவறிட-வாழ்வும் மாறிட
விழாகோலம் பூண்ட வீடு, பிணக்கோலம் காணுதே?
என் வாழ்வும் மீண்டும் இருண்டு போனதே!

சொந்த பந்தம் வாழ்த்தி வழியனுப்ப
துணைவியாய்-அமெரிக்கா வந்ததும்
பணத்துக்காய் போட்ட வேஷமோ?

பொன்மானை தேடிய  உன் வாழ்வில்
கலைமானும் கனவாக, கணவனும் சுமையாக
தேனியாய் நாம் சேர்த்த செல்வத்தில் பாதி
உன் சொத்தாக, ஏனடி திருடிக் கண்மறைந்தாய்?

கேட்டிருந்தால் நானே தந்திருப்பேன்-மண
விடுதலையையும் வரமாய் ஈந்திருப்பேன்
என் மனம் நோகுதடி

மணப்பெண்ணாய் வந்தவளே- பணிப்பெண்ணாய் மாறிப்
பணத்தோடு மாயமாய்க் கண்மறைந்தாள்?
மணவாழ்வு பொய்யென்று, பணமே மெய்யென்று
என்னை வெறும் கால் தூசென்றே உதறிச்சென்றாள்

வாடிய பூமாலையாய் புழுதியில் நான் வீழ்ந்திட
தீராச் சோகத்தில் செய்வதறியாது திண்டாட
நம்பிக்கை நலிந்த உலகில் தாலிகளும்
வெறும் நூல் வேலிகளோ?
என் பாவங்களுக்கு இதுவும் தண்டனையோ?

சுமைதாங்கியே சாய்ந்திட, சுமை என்று நீ ஒதுங்கிட
தாய்க்கு பின் தாரமே என்னைப் பாரம் என விட்டுப்பிரிந்தது.
அந்தோ பரிதாபம்!, வேரறுந்த மரமாய் நான் சாய-
விழுதாய் தாங்குவாய் என மனம் நம்பிட-நீயோ
நடாற்றில் என்னைக் கைவிட்டு கரைசோந்தாய்

கடவுள் தந்த கொடையாய் வந்து,
காவல் தெய்வமாய் என் குழந்தைகளை வளர்த்து
தாயாய், தாரமாய் வாழ்ந்த தேவதையே
ஏனடி என்னை ஏமாற்றினாய்?

தேளாய் என்னைத் தீண்டி, தீயாய் என்னைப் பொசுக்கி
காற்றாய் கண் மறையக்-கடவுளே
நோயுற்றது பாவமா?  நீ தந்ததும் சாபமா?

தந்தையில்லா உன் வறிய குடும்பத்திற்கு வாழ்வளிக்க
இளவயதில் பணிபெண்ணானாய், பின்னாளில், தாயிழந்த
என் குழந்தைகளுக்கும் எனக்கும் புது வாழ்வளிக்க
தாயும் தாரமுமானாய்- பாழும் நோய் என்னை அரிக்க-
பயந்தோ என்னைப் விட்டு பிரிந்தாய்?

மனம் நொந்து முதியோர் காப்பகத்தில்
தனிமையில் மடிகின்றேன்-தினம் கரைந்து
தாயை எண்ணிக் கண்ணீர் வடிக்கின்றேன்

நீயும் நெகிழ்ந்திட-என் மரணமும்
உனக்கு ஓர் நாள் சேதியாகும்
நிச்சயம்  உன் ஈரமனமும் எனக்காய்-
ஒரு துளி கண்ணீர் உதிர்க்கும்.

எங்கிருந்தாலும் வாழ்க நீ, தாரமாய் என் பிள்ளைகளுக்கு
தாயாய் நீ செய்த சேவை-தாயே பெரிது
என் நன்றியை மாதே மனமுவந்து
நான் மடியுமுன் தயவாய் ஏற்பாய் நீயே

தொப்பிள் உறவுகளும் பொய்யாகும் உலகில்
தாலியும் வெறும் கயிறோ? தாரமும்  பாரமோ?
ஶ்ரீராமனை பிரிந்த சீதையும் தேவ அவதாரமே
நீயும் பிரிந்தது இறைசித்தமோ? யார் அறிவார்?

உன்னைச் சொல்லிக் குற்றமில்லை
என்னைச் சொல்லிக் குற்றமில்லை
காலம் செய்த கோலமடி -இது
கடவுள் செய்த குற்றமடி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-22-05-2023*

# உதிரிப் பூக்கள்

---

ஏனடி, உன்னைப் பார்த்தேன்-என் நெஞ்சம் நழுவ,
நினைவோ உன்னை நினைந்துருக
பரவசமாகிக் காதலில் விழுந்தேன்.
கண்வழியே இதயம் கண்ணிராய்க் கரைய
காதலே, இன்று உனக்காய்த் தவிக்கின்றேன்.

பொங்கியெழும் அலைகளும்
சிலகாத தூரம்-ஆழத்திலோ
ஆழ்ந்த தியானத்தில் கடல்.

காதல் எல்லாம் காவியமானாள்-கல்லறைகள்
தாஜ்மஹாலாகும்.

காதலே கொண்டாட்டம்-கொண்டாட்டமே காதல்

வாழ்வு இன்பமானபோது, வழிபாடு கொண்டாட்டமாகிறது
வாழ்வு சுமையானபோது-வழிபாடு
வெற்றுச்சடங்காய் சாரமற்றுபோகின்றது.

இருப்பது இறைவன் மட்டுமே
வாழ்வே இறைவன்

தியானம் ஒரு பறவை-அன்பு, சுதந்திரம்
அதன் இறக்கைகள்.

உடல்கள் பிரிந்தாலும் உறவுகள் பிரிவதில்லை
நண்பர்கள் பிரிந்தாலும். நட்பு பிரிவதில்லை

என் விழிகள் உன்னைக்காண -கதிரவனுக்காய் காத்திருக்கும்
வெள்ளை கமலங்கள்போல் தவமாய்த் தவமிருக்கின்றன

கண்ணீரும், கலைந்த கனவுகளும்-அன்பே
உந்தன் காதல் பரிசா?

உன்னிடம் சொல்ல என்னிடம் ஆயிரம் கதைகள்
என்னிடம் சொல்ல- உன்னிடம் ஆயிரம் கவிதைகள்.
தனிமையில் சந்திக்கும்போது
காதல் கிளிகளாய்ப் பேசிமகிழ்வோம்

இன்றுதான் என் இதயத்துடிப்பு எனக்குத் தெரிந்தது
அதுவும் உன்னால் உன்னைக் கண்டதினால்
நெஞ்சம் காதல் கொண்டதினால்.

சூடத்துடித்த பூவும் வாடிப்போனது.
என் காதல் சுடரும் அணைந்துபோனது.

உன் நினைப்பே என் ஆனந்தம்
உள்ளத்தவிப்பே காதலின் பேரின்பம்

உன்மீதுதான் எத்தனை நேசமடி
என் சுவாசத்திலும்-காதலே உன் வாசமடி

உன் புன்னகை காதல் சுரம் பரப்பிடும்
காதல் வைரஸ்

காதலே! உனக்காய் காத்திருந்தேன்
யாரோ ஒருவனைக் கடந்து செல்வதுபோல்
என்னை கண்டும் காணாதவளாய்
நீ கடந்து சென்றாய்
இன்றும் என் நெஞ்சைப் புண்ணாக்கிட
உனக்கு மட்டும்தான் உரிமையுண்டு
ஏனெனில் இன்றும்
உன்னை நான் காதலிக்கின்றேன்.
நீயே என்றும் என் காதலி

ஒவ்வொரு அலையிலும்-அன்பே
உன்னை தழுவத்துடிக்கும் என்னையே காண்கிறேன்

இரவும் தூங்கிட-பொழுதும் விழித்திட
இனிய காலைப்பொழுது
பொழுதும் தூங்கிட இரவும் விழித்திட
இனிய இராப்பொழுது.

அருகிருந்தும் ஆயிரம் மைல் தூரமாய்
மனதில் இடைவெளி
பார்வைகள் பட்டுத்தெறித்தும்
குருடராய் காதல் நிலையடி

காதலுக்கு என்ன காரணம்
உன் கண்கள் சொன்ன மொழியால்
என் இதயம் கரைந்த மாயம்

மெல்லக்கழியும் இரவும் என்னைச் சுட்டுக் கொல்லுது,
உன் நினைவை அசைபோடும் மனதும்
விரகதாபத்தை கூட்டுது

நிலவே நீயின்றி என் வானம் இருளானது.
வான் நட்சத்திரங்கள் உதிர்ந்திட
வாழ்வும் வெறுமையானது.

உன்னாள் நொருங்கிய இதயத்தில்
உனக்காய்த் துடிக்கும் நினைவுகள்.

உன்னைப்பிரிந்தபின் வண்ணமிழந்த வானவில்
வாசமிழந்தது காதல் ரோஜா

என் நெஞ்சிலே-காதலின் ஆறாத காயங்கள்
கண்ணீர்மழை பொழியும் காதலின் சோக மேகங்கள்

என்னை வாட்டும் காதலும் வாடையோ?
என்னைத் தீய்க்கும் காதலும் நரகத்தீயோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-05-23

# வளர் பிறை

---

***விழிகளால்*** மெய் தழுவி, மொழிகளால் இதயம் திருடும்
காதல் திருடி இவள்தானோ? கையளவு மனசுக்குள்,
கடலளவு காதலடி, பார்க்கத் தவித்துப்
பார்த்ததுவும், பேசத் துடித்துப் பேசியதும்,
நெஞ்சம் பனிபோல் உருகுவதுவும் காதலா?
கொடிதா, இனிதா இந்த பொல்லாத காதல்?
ஒன்றும் புரியவில்லை

இதயப் பூவனமே காடாகிடக் , காதல் மழையோ
கலைந்து போயிட, காற்றலையும் சருகானேன்
கண்ணீர் ஊற்றெடுக்கும் சோகப் பொய்கையுமானேன்.

உன் பார்வைத் தூரத்தில் நானிருந்தும்
என்மேல் உன் விழிகள் குவியாத துயரம்,
கனிமொழி கேட்கும் தொலைவில் நானிருந்தும்
ஒரு புன்னகையேனும் உதிராத அவலம்.

வில்லாய் நிற்கும் புருவங்களும், வேலாய்த் தைக்கும் விழிகளும்
சொல்லும் மொழிதான் காதலா?-கள்வடியும் பூக்களுண்டு,
காதல்தேன் வடியும் பூக்களாய் உன் விழிகளடி
உண்டு போதையுற மதுவுண்டு கண்டு போதையேறும்
காதல் மதுவே உன்னைக் காணாவிட்டால்
என் நெஞ்சோ தகிக்கும் பாலையடி

தேகத்தை தகிப்பது காமமடி-இதயத்தை தீய்ப்பது காதலடி
கடனாய் ஏனும் காதல் தருவாயா?-வட்டியும், முதலுமாய்
திரும்பித்தருவேன் என் காதல் பொன்மணி?

பார்வையால் பார்வைகள் தழுவிக் களித்ததுவும்
கவிதையால் காதல் சொன்னதுவும்
தொட்டுத் தழுவிட ஏங்கித் துடித்ததுவும்
கனிமொழியில் கரைந்து உருகியதும் காதலாகிக் கனிந்திட-
என் உயிர் உன் காதலுக்காய்த் தவமிருக்குதடி
கனிந்தே, காதல் வரம் தருவாய் தேவி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-11-05-23

# வண்ணமகள் சொன்ன மொழி

---

பார்க்கத் தூண்டும் பாவை அழகால் பார்வை மயங்க,
பருகத் தூண்டும் பவளச் செவ்விதழ்களால் நெஞ்சம் கொதிக்க
விரிந்த கார்கூந்தலில் மலர்ந்த மதி முகம்- காதல் நிலவாக
கனவும், நினைவும் அவளாகிக் காதலான நெஞ்சம்

நடையோ நாட்டியமாக, இடையோ மின்னலாக
பூஞ்சடையோ ஊஞ்சலாடப் பூமகளோ நெஞ்சில் உலாவர
கடைக்கண் பார்வைக்காய், காளை நான் தவமிருக்க
படையோடு வரும் பாவையிவள்
காமன் கணைபட்டு வருந்தும் காதலனாய் இவன்

மொழியிலோ தேன் இனிக்க, விழிகளிலோ காதல் துளிர்க்க
பூ மேனியோ நாணத்தால் சிவக்க
காதலான நெஞ்சம் காளை மனதைக் கொஞ்சும்

கொஞ்சும் கிளி மொழிகளால் நெஞ்சம்
காதலாகிக் கனிய
கொவ்வைச் செவ்விதழ் கொத்தி
என்னை இன்புறவைத்த காதல் பைங்கிளி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-05-2023

# வன்முறைக் காதலி

---

என் இதயத்தை வாட்டும் காமசுரம் தணிந்திடக்
கட்டித் தழுவடா கன்னி என்னைக்
கனியாய் கசக்கிப் பிழியடா
என் இதழ்களை கடித்து சுவையடா-

காதல் மாதெனக்கு மருந்தும் விருந்தும், நீயடா
காதல் காமம் காட்டுத் தீயாய் என்னை எரித்திட
தென்றலாய் நீயோ கண்களால் தழுவிச் சென்றாய்

என் நெஞ்சுற்ற காதல் தீயணைக்க கட்டியணைத்து
முத்தமழை பொழிந்து காமத்தீ அணையடா என்றேன்
நீயோ அலைகளாய் என்னை நீராட்டி மகிழ-
நானோ காதல் நினைவுகளில் மூழ்கித்தவிக்க
அணையாத காமதீயில் உருகும் பனியாய்
கண்ணாளா என்தன் காதல் உள்ளம்

முத்தமழையின்றிச் செவ்விதழ்களும் தீப்பிடிக்க
மோகசுரம் ஏறி ரத்தமும் கொதிக்க-காதல் அரவம்
தீண்டிக் காமமும் தலைக்கேறிட-தவிக்கிறேனடா,
கண்ணாளா காதல் அமுது பருகத் தருவாயடா

என்னை கடித்துச் சுவைத்துக்-காதல் விஷம் தணியடா
செவ்விதழ் அமுதைக் குடித்து , இதழ் தீ அணையடா என்றேன்
தேன்தும்பியாய் நீயோ என்னைச் சுற்றி வந்தாய்

சிற்றிடையைப் பற்றிக் கொள்-என்-சிறு நுதலில் முத்தம் வைத்து-
மோகனம் என்னில் காமசூத்திரம் எழுது-
சித்தன்ன வாசல் மோகினியாய் நான் மாற-
இதழ்களால் என் இதழ்களில் சித்திரங்கள் தீட்டு
காதல் பாசுரம் ஒலிக்க, பொன்னுடலை
உன்னடலால் மரகத வீணையாய் மீட்டு

வன்முறை காதலி என்னை -அஹிம்சையால் இம்சிக்கின்றாய்
இதயம் வலிக்குதடா, இன்பம் பெருகுதடா
காதல் கண்ணாளா

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-05-23

# வண்ணக்கிளி

---

காதல் துயரோ, கரையாத துருவப்பனிபோல்
நெஞ்சில் உறைந்த்திருக்க-சாவிற்கும்
சக்தியில்லை என் சோகத்தை கரைப்பதற்கு
மதுவிற்கும் சக்தியில்லை
மனம் நிறைந்த மாதை மறப்பதற்கு

கண்ணீருக்கும் சக்தியில்லை காதலை அழிப்பதற்கு
கடவுளுக்கும் சித்தமில்லை-அவளை நான் மறப்பதற்கு?
என்ன செய்வேன் நான் என்ன செய்வேன்?
என் காதல் காவியமாகுமுன்-அவளோ
கண்மறைந்த நிலவானாள், கலைந்த கனவானாள்.

வண்டுகளும் வண்ணமலர்களை அணைத்திட
வான் நிலவும் அல்லிமலரைத் ஆரத்தழுவிட
கூடிப்பாடும் கானகுயில்களும், கொஞ்சி குலாவும்
காதல் கிளிகளும் காதல் சொல்லி மகிழ்ந்திட
கண்ணே நெஞ்சம் வாடுதடி
நீயின்றி இதயம் காதல் தீயில் வேகுதடி

பார்க்குமிடமெல்லாம் பூவையே
உன்னைக் காணாது என் விழிகள் நீர் பூத்து வாட
உன் ஒரு மொழிக்காய் இதயம் முகாரி பாட
ஊமையான மனம் உருகித்தவிக்குதடி

தேன் நிலவே உன் வானம் நானடி
வண்ணமலரே என் மதுக்கிண்ணம் நீயடி
நீலக்குயிலே என் கானம் உனக்கடி
என்றும் நீதான் என் காதல் குயிலடி

கோலமயில்களும் நமக்காய் ஆடிட
கொஞ்சும் கிளிகளும் நம் கதை பேசிட
வானம்பாடியாய் பாடிப் பறந்திட
வாராயோ என் காதல் பைங்கிளி?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-05-23

# வெற்றுத் தாள்கள்

---

என் நாட்குறிப்பேட்டில் சொல்ல முடியாத சோகத்தை
காதல் தோல்வியின் அவலத்தை
காட்டும் கண்ணாடியாய் வெற்றுத்தாள்கள்

சூனியத்தின் இருண்ட நிழலும்,
விரக்தியின் வெளிப்பாடும்
அவநம்பிக்கையின் நோய்காடும்
தோல்விகளின் தொடர் படையெடுப்பும்
வாட்டிய நாட்கள் அவை

சோகத்தின் எதிரொலி,
காதலின் தீராத வலி-நரகத்தின் வெம்மை-
எல்லாம் அந்த வெற்றுத்தாள்களில்
விளங்காத வடிவத்தில்.

உணர்வின் எதிரொலியைக் கேட்டவர்
துடிக்கும் இதயத்தின் தவிப்பை உணர்ந்தவர்
காதலில் தோற்றவர் படித்தார்-மற்றவர்
வெற்றுத்தாளென பக்கங்களைப் புரட்டிச்சென்றார்

ஒரு கவிஞனின் உணர்ச்சிக் கோலத்தை
காதல் தோல்வியின் அவலத்தை புரிந்திட
காதல் மனம் வேண்டும்-
தேவதாஸின் மனநிலை வேண்டும்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-05-23

# விழி- மொழி -மலர்கள்

---

வண்ணமும், வாசமுமின்றிப் பூத்தவுடன்
உதிரும் விழி மலர்களே-கவலைக்கு மருந்தே!
காதல் கன்னியரின் ஆயுத எழுத்தே!

வான்மழைக்கும் காலமுண்டு
கண்ணீர் மழைக்குப் பருவகாலம் ஏது?
அழுகையும், ஆனந்த கண்ணீருமாய் -உன்
அதிசய நிலைகள்-தேனில்லாத மலரே
உவர்ப்பாய் உன் அருஞ்சுவைகள்

காதலை மொழிந்து, கண்ணீரைப் பொழிந்து
கோபத்தை காட்டி, விரகதாபத்தை கூட்டி
கயலாகி, வேலாகி, காமன் கணையாகி
பாவங்கள் பல காட்டும்
அபிநய சுந்தரியின் அதிசய விழிகளில்
பூத்திட்ட மலர்களாய்க் கண்ணீர்த் துளிகள்.

பாவங்கள் பல காட்டும் விழியே-படைத்தவனும்
இமைசூடி உன்னைச் சிறப்பித்ததும் அழகே
தமிழ் பாவலனும் உன்னைக் கயலாய், வேலாய், மலராய்
சிறப்பித்ததும் அழகினும் பேரழகே

வண்ண விழிகளோ-வார்த்தைகளினின்றி காதல் கதை பேசிட,
விழிகளும், விழிகளைத்தழுவி காதல் போதையில் மயங்கிட
காதல் மதுவோ கன்னியிவள் பார்வை
பார்த்தாலே பெரும் போதை மனம் கவி பாடிட
கண்பார்த்து நெஞ்செழுதும் காவியமாய் காதல்.

இதயகோயிலின் நுழைவாயிலாய்
இமைசூடிய காதல் கன்னியரின் அஞ்சணவிழிகள்
மையிட்ட விழிகளில் மயங்கித் தோற்ற- காளையர்
விழிகளிலும் காயாத கண்ணீர் மலர்கள்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-05-23